*Post-Basic Schools.*

*781 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாநிலத்தில் மேலும் போஸ்ட்-பேசிக் பள்ளிகள் (உயர்நிலை ஆதாரப் பள்ளிகள்) ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

(ஆ) அப்படியானால் எத்தனை, எங்கெங்கே ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The opening of five Post-Basic Schools in the following places is under correspondence with the Government of India :—

(1) Orathanad, Tanjore district.

(2) Tirur, Chingleput district.

(3) Gangavalli, Salem district.

(4) Perivallikottai, Tirunelveli district.

(5) Tirumullavasal, Tanjore district.

SRI A. VEDARATHNAM : காம்பாக்ட் ஏரியாவிலே உள்ள உயர்நிலைப்பள்ளிகளைப் போஸ்ட்-பேஸிக் பள்ளிகளாக மாற்றுவதற்கு உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ? இது சம்பந்தமாக இந்த ஆதாரக் கல்வி ஆலோசனைக் கமிட்டி செய்யும் சிபார்சுகள் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப் பட்டனவா ? அப்படியானல் அது எப்பொழுது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கமிட்டி செய்த சிபார்சுகளைப் பரிசீலனை செய்து, அதுபற்றி உத்தரவு வெளியாகவில்லை. இந்த ஐந்து பள்ளிக்கூடங்களும் இப்பொழுது பயிற்சிப் பள்ளிக்கூடங்களுடனே இணைக்கப்பட்டிருக்கின்றன. அதை அனுசரித்து இவைகளைப் போஸ்ட்-பேஸிக்காகச் செய்யலாம் என்ற உத்தேசத்தின்பேரிலே இந்தியா கவர்ன்மெண்டுடன் இப்பொழுது கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருக்கிறது,

*Professional Colleges*

*785 *Q.*—SRI N. V. CHOCKALINGAM (on behalf of Sri T. T. Daniel) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total number of seats allotted to each district for admission to Professional Colleges; and

(*b*) the basis on which the seats are allotted to each district?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

SRI A. GOVINDASAMY : ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இத்தனை இடங்கள் என்று விதிக்கும்போது, பின் தங்கிய மாவட்டங்களில் பிறந்ததாக தவறான சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்து சில இடங்களிலே இடம் பிடித்துக் கொள்கிறார்கள் என்ற தகவல் அரசாங்கத்திற்கு வந்திருக்கிறதா ? அப்படியானல், அதைத் தடுப்பதற்கு என்ன முயற்சி எடுக்கப் படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி சில இடங்களிலே நடந்திருக்கலாம், என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இதிலே நாம் கொஞ்சம் கவனமாக நடந்துகொள்வதற்குப் பழகும் வரையிலும் இதுபோன்ற தவறுதல்கள் நடந்துகொண்டுதான் இருக்கும். எவ்வளவு விதிகள் செய்தாலும்கூட கடைசியில் விதிகளின் நோக்கம் நிறைவேறுவது மக்களுடைய நாணயத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

[a] Printed as Appendix III on pages 469-470 infra.